[13th November 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : Thank God, it has not yet happened.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, அரசியல் தலைவர்களால் தங்களுடைய கூட்டங்களில் இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் ஏற்படவேண்டுமென்று அவர்களாலேயே ஏற்பாடு செய்யப்படுவதாக அரசாங்கத்திற்கு துப்பறியும் இலாகா மூலமாகத் தெரிய வந்திருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அங்கத்தினர் தெரிந்து சொல்லுவதால் அதை உண்மை என்று எடுத்துக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். அவர்களே ஏற்பாடு செய்வதாக அரசாங்கத்திற்கு தகவல் ஏதும் இல்லை.

SRI T. S. RAMASWAMI : May I know from the incidents which have come to the notice of the Government, whether any party is specialising in disturbing any meeting, and if so, what the name of that party is?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not want to name any party but it is wellknown who is indulging in these things. Apart from this, I want to make an appeal to every political party particularly to see that these tendencies are curbed if there are such tendencies. If there is no such tendency, it is quite welcome.

SRI A. GOVINDASAMI : சென்னை கடற்கரையில் நடைபெற்ற கூட்டத்திற்கு ராஜாஜி அவர்கள் போய்க்கொண்டிருந்த போது கத்தியினால் குத்த வந்தவர் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர் என்று அரசாங்கத்திற்குத் தெரிய வந்ததா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : போக்கிரிகள் கட்சியைச் சேர்ந்தவர்.

SR. P. U. SHANMUGAM : ஒருமைப்பாடு மாநாட்டில் கலந்துகொள்ளாததால் நடைபெறுகின்ற எதிர்கட்சிகளின் கூட்டங்களைக் கலைப்போம் என்று எந்த அரசியல் தலைவராவது பொதுக் கூட்டத்தில் சொல்லியிருக்கிறாரா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இல்லை, இந்த விதிகள் எங்களை கட்டுப்படுத்தாது என்று சொல்லியிருக்கிறார். அந்த விதிகளில் ஒன்று கூட்டத்தைக் கலைப்பது பற்றியது. இதுவும் அவர்களைக் கட்டுப்படுத்தாது என்று சொல்லுவதாகத்தான் எல்லோரும் புரிந்து கொண்டார்கள். அப்படியில்லையென்றால் ரொம்பவும் சந்தோஷம்.

*Water-borne Disease (Vriddhachalam taluk)*

*2030 Q.—SRI A. GOVINDASAMI (on behalf of SRI M. SELVARAJ) : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விருத்தாசலம் தாலுகா ஊமங்கலம் பிர்க்காவில் குடிநீரால் ஏற்படுகின்ற நரம்புச் சிலந்தி வியாதியை போக்குவதற்காக எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

13th November 1961]

(இ) இந்தப் பகுதியில் குடிநீர் வசதிக்காக புதிய திட்டம் ஏதாவது உண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) The drinking water sources in the villages in the Umangalam firka where the Guineaworm disease is endemic were treated with D.D.T. The infected persons were given medical treatment.

(இ) Proposals for providing drinking water facilities by constructing overhead tanks in 13 villages in the firka are under consideration.

**SRI A. GOVINDASAMI :** தேங்கியிருக்கிற செம்மண் குடிநீரைச் சாப்பிடுகிற காரணத்தினால்தான் அந்தப் பகுதி மக்கள் நரம்புச் சிலந்தி போன்ற வியாதிகளால் 6 மாதம், 7 மாதம் என்று நோய்வாய்ப்பட்டிருக்கிறார்கள். அரசாங்கம் இப்போது எடுத்திருக்கும் நடவடிக்கை போதாது. ஆகையால் தீவிர நடவடிக்கை எடுத்து எல்லா கிராமங்களுக்கும் குடி தண்ணீர் திட்டத்தை அவசரமாகக் கொண்டுவர ஏற்பாடு செய்வார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** அந்தக் காட்சியை நானே கண்ணால் பார்த்தேன். ஆகையால்தான் தீவிரமாக நடவடிக்கை எடுத்து அதை நிவர்த்திக்க வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

**SRI T. IRUSAPPAN :** தலைவர் அவர்களே, விருத்தாசலம் தாலுகா மட்டுமல்லாமல் இன்னும் மலைப் பிரதேசங்களில் இருக்கக் கூடிய மலைவாசிகளுக்கும் இந்த நோய் வருகிறது. அங்கேயும் இந்த சுகாதாரத் தண்ணீர் திட்டத்தை ஏற்படுத்துவதற்கு நடவடிக்கை எடுப்பார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** மலைப் பிரதேசத்திலிருந்தால் அதுவும் கவனிக்கப்படும்.

**SRI A. GOVINDASAMI :** ஊமங்கலம் பிர்க்காவில் மலைப் பிரதேசம் கிடையாது. 13 கிராமங்களில் நடவடிக்கை எடுக்கப்படுவதாகச் சொல்லுகிறார்கள். எல்லா கிராமங்களிலும் பொது ஜனங்களிடமிருந்து கண்ட்ரிப்யூஷன் வாங்காமல் நடவடிக்கை எடுக்க ஏற்பாடு செய்வார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** 13 கிராமங்களில் ஓவர்ஹெட் டாங்க் அமைப்பது பற்றியது. மற்ற கிராமங்களில் ட்ரா வெல், போர் வெல் போன்ற ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

### *Tourist Home for Tiruchendur*

*** 2031 *Q.*—SRI A. A. RASHEED** (on behalf of SRI M. S. SELVARAJAN) : Will the Hon. the Minister for Finance be pleased to state—